ஸ்ரீராமஜெயம்

# பஞ்சாங்க கணனம்

## இரண்டாம் பாகம்

எழுதியவர்
ஜோதிடபூஷண கணித மேதை
திரு. C.G. ராஜன் B.A. (Maths)



கிரி
கிரி டிரேடிங் ஏஜென்ஸி பிரைவேட் லிமிடெட்

---*---

**PANCHANGA GANANAM (PART-II)**
(Tamil)
ISBN : 978-81-7950-241-9

Price : ₹ 50.00
1st Edition : June 2001 | 2nd Reprint : April 2016
Pages 64 | Demi | Maplitho | 500 Copies

Published by : GIRI TRADING AGENCY PRIVATE LIMITED

*Regd. Office* : Modi Niwas, Opp.Post Office, Matunga, Mumbai - 19. ✆ (022) 2412 1344
*Admn. Office*: No.372/1, Mangadu Pattur Koot Road, Mangadu, Chennai - 600 122.
✆ +91 44 66 93 93 93 (Multiple Lines), +91 44 2679 3190, 3100
www.giri.in ✉ sales@giri.in
SHOWROOMS : MUMBAI - CHENNAI - KANCHIPURAM - COIMBATORE - MADURAI - TRICHY
SALEM - PUDUCHERRY - SECUNDERABAD - BENGALURU -NEW DELHI

## விஷய அட்டவணை

## 2-வது பாகம்

# கிரஹ ஸ்புட சார கணனம்

# முகவுரை

## 2-வது பாகம்

## கிரஹ ஸ்புட சார கணனம்

முதல் பாகத்திற்குக் கொடுக்கப்பட்டிருக்கும் முகவுரையை முதலில் இங்கு வாசிக்கவும். இந்த இரண்டாவது பாகத்தில் குஜாதி பஞ்ச கிரஹங்களின் ஸ்புடங்களை முதலில் கணிக்கும் வழி கொடுக்கப் பட்டிருக்கின்றது. பிறகு இந்த ஸ்புடங்களின் உதவியால் கிரஹங்களின் பாதசா்ரங்களைக் கணிக்கும் வழியுங்கொடுக்கப்பட்டிருக்கின்றது. 34–ஆவது பக்கம் முதல் 50–ஆவது பக்கம் வரையிலுமுள்ள குஜாதி பஞ்ச கிரஹ பரிவிருத்தி வாக்கியங்கள் அனேக அசல் காப்பிகளைப் பரிசோதித்தும், ஒப்பிட்டும் பார்த்துத் தேவையானத் திருத்தங்களைச் செய்து கொடுக்கப்பட்டிருக்கின்றன. கிரஹங்களின் உதய அஸ்த மனங்கள் வக்கிர ஆரம்பம், வக்கிர நிவா்த்தி காலங்கள், துருவப்பெயா்ச்சி காலம், இராகு சாரத்தைக் கணித்தல் ஆகிய இவற்றைக் கணிக்கும் வழிகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

சென்னை

C.G.ராஜன்)B.A., (Maths)

ஸ்ரீ விநாயகர் – ஸ்ரீ கண்ணபிரான் துணை

ஸ்ரீராமஜெயம்

# பஞ்சாங்க கணனம்

## இரண்டாவது பாகம்

## கிரஹங்களின் ஸ்புட கணமும், சார கணனமும்

### குஜாதி பஞ்ச கிரஹங்களும் இராகு கேதுக்களும்.

அயிட்டம் நெ.(1):- நான் இனிமேல் குஜாதி பஞ்ச கிரகங்களாகிய (1) அங்காரகன் என்ற குஜன், (2)புதன், (3) பிரகஸ்பதி என்ற குரு, (4)சுக்கிரன், (5) சனி ஆகிய இந்தப் பஞ்ச (ஐந்து) கிரகங்களினுடைய ஸ்புடங்களைக் கணிக்கும் மார்க்கத்தைப் பற்றிச் சொல்லப் போகின்றேன். ஒரு குறித்த தினத்தின் குறித்த வேளைக்கு ஒரு கிரகத்தின் ஸ்புடத்தைக் கணிக்க (1) முதன்முதல் 'குறித்த வேளைக்கான' கலியுக சுத்த தினத்தைக் கணிக்க வேணும். (2) பிறகு இந்தக் கிரகத்தின் துருவம் என்ற ஒரு தொகையைக் கணிக்க வேண்டும். (3) பிறகு வர்ணாக்ஷரம் என்ற ஒருவித எண்ணையும் இந்த வர்ணாக்ஷரத்திற்குரிய ஒரு தொகையையும் கணிக்க வேண்டும். (4) பிறகு இவற்றையும், ஒரு குறித்த வாக்கியத்திற்குரிய இந்தக் கிரகத்தின் மத்திம ஸ்புடத்தையும் சேர்த்து மொத்தத் தொகையை அறிய வேண்டும். இந்த மொத்தத் தொகை தான் இந்தக் கிரகத்தின் குறித்த காலத்தின் ஸ்புடமாகும்.

இக்கணிதம் செய்வதற்காக முதலில் சில வாக்கியங்களைத் (டேபில்களைத்) தயார் செய்து வைத்துக் கொள்ள வேண்டியதாக விருக்கின்றது. இவை (1) சோத்திய வாக்கியங்கள், (2)பரி விருத்தி வாக்கியங்கள் என்ற பெயருடையனவாகும். இவை கீழ்க்கண்டனவாகும்.

### அயிட்டம் நெ.(2);- உதாரணம் நெ.(1):-

உதாரணமாக விகாரி வருஷம் சித்திரை மாதத்தில் குருவினுடைய சுத்த ஸ்புடத்தைக் கணிப்போம்:- முதலில் விகாரி வருஷம் சித்திரை மாதத்தின் மாதப் பிறப்பிற்குக் கலி சுத்தத் தினத்தைக் கணிக்கவேணும். இதை 1–வது பாகம் டேபில் நெ.(10) b-யின் கீழ்கொடுத்துள்ள வழிப் பிரகாரம் கணிக்கக் கலி சுத்ததினம் 1848206 நாள் –46 நாழிகை –33 விநாடி –45 தற்பரை ஆகும்.

# டேபில் நெ.(1)

## சோத்திய வாக்கியங்கள்

### (1) அங்காரகன்

| மண்டலங்கள் | துருவம் நாள் | நாழிகை | கலையில் |
|---|---|---|---|
| (1) | 1552827 | 35 | −402 |
| (2) | 634089 | 09 | +005 |
| (3) | 132589 | 21 | +027 |
| (4) | 28857 | 41 | +133 |
| (5) | 17158 | 37 | −504 |
| (6) | 11699 | 04 | −638 |

ஒரு பரிவிருத்தியின் மொத்த நாட்கள் 780

### (2) புதன்

| மண்டலங்கள் | துருவம் நாள் | நாழிகை | கலையில் |
|---|---|---|---|
| (1) | 1592740 | 22 | −033 |
| (2) | 16801 | 54 | +001 |
| (3) | 4750 | 53 | +149 |
| (4) | 2549 | 15 | −447 |

ஒரு பரிவிருத்தியின் மொத்த நாட்கள் 116

### (3) குரு

| மண்டலங்கள் | துருவம் நாள் | நாழிகை | கலையில் |
|---|---|---|---|
| (1) | 1570425 | 17 | −261 |
| (2) | 974875 | 26 | +001 |
| (3) | 125648 | 50 | −009 |
| (4) | 65018 | 17 | +133 |
| (5) | 30315 | 17 | −071 |
| (6) | 21539 | 48 | −619 |
| (7) | 4387 | 44 | +274 |

ஒரு பரிவிருத்தியின் மொத்த நாட்கள் 399

### (4) சுக்கிரன்

| மண்டலங்கள் | துருவம நாள் | நாழிகை | கலையில் |
|---|---|---|---|
| (1) | 1561937 | 44 | +0018 |
| (2) | 437945 | 00 | +0000 |
| (3) | 174594 | 07 | +0028 |
| (4) | 88756 | 53 | −0057 |
| (5) | 44962 | 22 | +2102 |
| (6) | 2919 | 38 | −0144 |

ஒரு பரிவிருத்தியின் மொத்த நாட்கள் 584

### (5) சனி

| மண்டலங்கள் | துருவம் நாள் | நாழிகை | கலையில் |
|---|---|---|---|
| (1) | 1589474 | 28 | −326 |
| (2) | 570534 | 08 | +005 |
| (3) | 182994 | 23 | −013 |
| (4) | 21551 | 00 | +043 |
| (5) | 10964 | 32 | +481 |

ஒரு பரிவிருத்தியின் மொத்த நாட்கள் 378

### டேபில் நெ(2) கிரகங்களின் மந்தோச்சம்

| கிரகங்கள் | மந்தோச்சம் பாகை கலை | வர்ணாக்ஷர எண் |
|---|---|---|
| அங்காரகன் | 118−00 | −6.0 |
| புதன் | 240−00 | −3.7 |
| குரு | 180−03 | −4.3 |
| சுக்கிரன் | 93−00 | −1.1 |
| சனி | 236−00 | −5.9 |

(டேபில் நெ.10 b-யில் 5060 விகாரிக்கு எதிரிலுள்ள தொகையே இது ஆகும்.) இந்தத் தொகைக்குக் குருவினுடைய சோத்திய வாக்கியமான டேபில் நெ (1)(3)–யை உபயோகப்படுத்திக் கீழ் கண்டபடித் துருவத் தொகையையும் வர்ணாக்ஷர எண்ணையும் இந்த வர்ணாக்ஷர எண்ணிற்குரிய தொகையையும் கணிக்கவேணும்.

| | நாள் – நாழி–விநா | துருவம் காலையில் | |
|---|---|---|---|
| கலி சுத்த தினம் | 1848206–46–34 வரையில் ஆகும் | | (1) |
| கழிக்கப்படுகின்ற மண்டலம் | 1570425– 17– 00 | (–)261 கலை ... | (2) |
| மிச்சம் | 277781– 29– 34 | ... ... ... | (3) |
| மண்டலம் | 125648– 50– 00 | (–)009 கலை ... | (4) |
| மிச்சம் | 152132– 39– 34 | ... ... ... | (5) |
| மண்டலம் | 125648– 50– 00 | (–)009 கலை ... | (6) |
| மிச்சம் | 26483– 49– 34 | ... ... ... | (7) |
| மண்டலம் | 21539– 48– 00 | (–)619 கலை ... | (8) |
| மிச்சம் | 4944– 01– 34 | ... ... ... | (9) |
| மண்டலம் | 4387– 44– 00 | (+)274 கலை ... | (10) |
| மிச்சம் (து.பெ.சேஷம்) | 556– 17– 34 | ... ... ... | (11) |

பிறகு (11)ல் வந்த மிச்சமாகிய 556 நாள் –17 நாழிகை–34 விநாடி என்ற தொகையைக் கடைசி மண்டல சேஷம் (மீதம்) அல்லது துருவப் பெயர்ச்சி சேஷம் (து–பெ–சேஷம்) என்றும் சொல்லுவோம். இந்தக் கடைசி மண்டல சேஷத்தை இந்தக் கிரகத்திற்குரிய ஒரு பரிவிருத்தியின் மொத்த நாள்களாகிய 399 நாட்களால் வகுக்க வருகின்ற பலம் (quotient) சென்று போய்விட்ட அஃதாவது கதபரி விருத்திகளைக் குறிக்கும். இவ்விதமாக 399–ஆல் வகுத்துவந்த மிச்சம் வருஷ சேஷம் (மீதம்) என்று சொல்லப்படும். இங்குவந்த கடைசி மண்டலசேஷமாகிய 556 நாள் –17 நாழிகை –34 விநாடி என்ற தொகையை 399 நாள் என்ற ஒரு பரிவிருத்தியால் வகுக்கப்பலம் (quotient) ஒன்றும் மிச்சம் 157 நாள் –17 நாழிகை –34 விநாடி வரும். இந்த மிச்சம் வருஷசேஷம் என்று சொல்லப்படும். இந்தப் பலமாகிய ஒன்று கதபரிவிருத்தி என்று சொல்லப்படும். ஆகையால் குருவில் ஒரு பரிவிருத்தி அஃதாவது

ஓராவது பரிவிருத்தி சென்று போய் இரண்டாவது (நடப்புப்) பரிவிருத்தி நடக்கின்றதென்றும் இந்த இரண்டாவது பரிவிருத்தியில் 157 நாள்–17 நாழிகை -34 விநாடி சென்று விட்டது என்றும் ஏற்படுகின்றது. ஆகையால் குறித்த காலமாகிய விகாரி வருஷம் சித்திரை மாதத்தின் மாதப் பிறப்பிற்குக் குருவில் இரண்டாவது நடப்புப் பரிவிருத்தியில் 157-நாள் –17 நாழிகை –34 விநாடி செல்லாகி விட்டது என்று ஏற்படுகின்றது.

மேலும் குருவின் கடைசி மண்டல வாக்கியமாகிய (7) வது மண்டல வாக்கியமாகிய 4387 நாள்–44 நாழிகையைக் குருவின் ஒரு பரிவிருத்தியின் மொத்த நாளாகிய 399–நாளால் வகுக்க பலம் சுமார் 11 வருகிறது. ஆகையால் கடைசி மண்டல வாக்கியத்தில் 11-பரிவிருத்திகள் அடங்கியிருக்கின்றன. ஆகையால் குருவிற்கு மொத்த பரிவிருத்திகள் 11 (பதினொான்று) ஆகும். ஆகையால் குருவிற்குப் பரிவிருத்திகள் 1 முதல் 11 வரையிலும் (ஒன்று முதல் பதினொான்று வரையிலும்) ஆகும். இவ்விதமாகப் பரிவிருத்திகள் ஒன்று முதல் பதினொான்று வரையிலும் திரும்பித் திரும்பி வந்து கொண்டேயிருக்கும். பதினோராவது பரிவிருத்தி (அஃதாவது கடைசி பரிவிருத்தி முடிந்து அடுத்தப் பரிவிருத்தியாகிய ஓராவது பரிவிருத்தி ஆரம்பிக்கும்போது "துருவப்பெயர்ச்சி" என்பது நேரிடும்.

## அயிட்டம் நெ.(3):- துருவம் கணித்தல்

மேலே நெ.(2)–வது அயிட்டத்தில் நெ.(1)–வது உதாரணத்தில் கணிதம் செய்ததில் (2)(–) 261 கலையும், (4)(–)009 கலையும், (6)(–)009 கலையும், (8)(–)619 கலையும், (10)(+) 274 கலையும், துருவங்களாக வந்திருக்கின்றன. இவற்றில் (2), (4), (6), (8) ஆவது துருவங்கள் ருணக் குறியுடையன. இவற்றின் மொத்தம் (–) 898 கலையாகும். இது ருணக்குறியுடையது. 10–ஆவது துருவம்+274 கலை ஆகும். இது தனக் குறியுடையது. தனக்குறி ருணக்குறியுடைய துருவங்களாகிய +274 கலையையும்' ருணக்குறியுடைய மொத்த துருவமாகிய (–)898 கலையையும் ஒன்றாய்ச் சேர்க்க(–)624 கலை நிகர மொத்த துருவமாகும். இது ருணக்குறியுடையது. ஆகையால் நிரக மொத்தத்துருவம் (–)624 கலை ஆகும். அல்லது நிகர மொத்தத்துருவம் (–)10 பாகை–24 கலை–00 விகலை ஆகும். இதைத்தான் குருவினுடைய துருவஸ்புடம் என்று சொல்வதுண்டு. இந்தத் துருவஸ்புடம் குருவினுடைய 1–வது பரிவிருத்தி

ஆரம்பம் முதல் 11–வது பரிவிருத்தி முடியும் வரையிலும் மாறாமல் நிலையாய் இருக்கின்ற துருவஸ்புடம் ஆகும். இதன் பிறகு அடுத்து வருகின்ற ஓராவது பரிவிருத்திக்கு துருவஸ்புடம் மாறிவிடும். அப்போது துருவம் மாறுதல் அல்லது துருவப் பெயர்ச்சி ஏற்படும்.

## அயிட்டம் நெ.(4):- வர்ணாக்ஷரம் கணித்தல்

மேலே அயிட்டம் நெ. (3)–ல் வந்த நிகர மொத்தத் துருவமாகிய (–)624 கலையை விகலையாக பாவிக்க (–) 624 விகலை வரும். அஃதாவது (–) 0 பாகை–10 கலை–24 விகலை ஆகும். இந்த (–)0 பாகை–10 கலை–24 விகலை தான் வர்ணாக்ஷரஸ்புடம் ஆகும். இது ருணக்குறியுடையது. இந்த வர்ணாக்ஷரஸ்புடம் கூட (துருவத்தைப் போல) 1–வது பரிவிருத்தி முதல் 11–வது பரிவிருத்தி வரையிலும் மாறாமல் நிலையாக இருக்கும். இது அடுத்து வருகின்ற 1–வது பரிவிருத்தியில் துருவத்தைப் போல மாறிவிடும்.

1-வது குறிப்பு: துருவத்தில் பாகையாக இருப்பது வர்ணாக்ஷரத்தில் கலையாக மாறிவிடும். துருவத்தில் கலையாக இருப்பது வர்ணாக்ஷரத்தில் விகலையாக மாறிவிடும்.

மேலும் மேலே வந்த (–)0 பாகை–10 கலை–24 விகலை என்ற வர்ணாக்ஷரஸ்புடம் வர்ணாக்ஷர தன எண் என்ற+1 (ஒன்றுக்கு) உரியதாகும். அஃதாவது வர்ணாக்ஷர எண்+1–க்கு வர்ணாக்ஷர ஸ்புடம் (–)0 பாகை–10 கலை–24 விகலை ஆகும். இது ருணக்குறியுடையது. வர்ணாக்ஷர எண் +2–க்கு வர்ணாக்ஷர ஸ்புடமாகிய (–0 பாகை–10 கலை –24 விகலையை 2–ஆல் பெருக்க வருகின்ற (–) 0 பாகை–20 கலை–48 விகலையே மொத்த வர்ணாக்ஷரஸ்புடம் ஆகும். இது ருணக்குறியுடையது.

குறிப்பு: வர்ணாக்ஷர எண்ணும், வர்ணாக்ஷர ஸ்புடமும் ஒரே ரகமான குறியை உடையதாகில் அஃதாவது இரண்டும் தனக்குறி அல்லது இரண்டும் ருணக்குறியுடையனவாக இருந்தால் மொத்த வர்ணாக்ஷரஸ்புடம் எப்போதும் தனக்குறியையுடையதாகும். இரண்டும் வெவ்வேறான குறியை உடையனவாகில் அஃதாவது ஏதாவது ஒன்று தனக்குறியும் மற்றொன்று ருணக்குறியும் உடையதானால் மொத்த வர்ணாக்ஷரஸ்புடம் எப்போதும் ருணக்குறியுடையதாகும்.

**அயிட்டம் நெ.(4A):- ஆகையால் வர்ணாக்ஷர எண் +1-க்கு வர்ணாக்ஷர ஸ்புடம் (–)0 பாகை–10 கலை–24 விகலை ஆனால்**

| வர்ணாக்ஷர எண் | மொத்த வர்ணாக்ஷரஸ்புடம் பாகை–கலை–விகலை | வர்ணாக்ஷர எண் | மொத்த வர்ணாக்ஷரஸ்புடம் பாகை – கலை – விகலை |
|---|---|---|---|
| +1 க்கு | (–)0 –10– 24 | (–) 1–க்கு | (+)0 –10– 24 |
| +2 க்கு | (–)0 –20– 48 | (–) 2 க்கு | (+)0 –20– 48 |
| +3 க்கு | (–)0 –31– 12 | (–) 3 க்கு | (+)0 –31– 12 |
| +4 க்கு | (–)0 –41– 36 | (–) 4 க்கு | (+)0 –41– 36 |
| +5 க்கு | (–)0 –52– 00 | (–) 5 க்கு | (+)0 –52– 00 |
| +6 க்கு | (–)1 –02– 24 | (–) 6 க்கு | (+)1 –02– 24 |
| +7 க்கு | (–)1 –12– 48 | (–) 7 க்கு | (+)1 –12– 48 |
| +8 க்கு | (–)1 –23– 12 | (–) 8 க்கு | (+)1 –23– 12 |
| +9 க்கு | (–)1 –33– 36 | (–) 9 க்கு | (+) 1 –33– 36 |
| +10 க்கு | (–)1 –44 –00 ஆகும் | (–)10 க்கு | (+) 1 –44– 00 ஆகும் |

அயிட்டம் நெ.5:- மேலும் அயிட்டம். நெ.2–ல் விகாரி வருஷத்திய சித்திரை மாதப் பிறப்பிற்குக் குருவில் 2–வது நடப்புப் பரிவிருத்தியில் 157–நாள்–17 நாழிகை–34 விநாடி செல்லாகி விட்டது என்று ஏற்படுகின்றது என்று முன்னமே நாம் சொல்லியிருக்கின்றோம். இப்போது குருவின் 2–வது பரிவிருத்தியின் வாக்கியத்தை (டேபில் நெ.3யை)ப் பார்ப்போமானால் இந்த 157–வது 1–வது கலத்திலுள்ள 150–ஆவது நாள் வாக்கியத்திற்கும் 165–ஆவது நாள் வாக்கியத்திற்கும் இடையில் இருப்பதாக ஏற்படுகிறது. 150–ஆவது நாள், 165–ஆவது நாள் என்ற இவ்விரண்டு வாக்கியங்களில் 150–ஆவது நாள் வாக்கியம் பூர்வ(முன்) வாக்கியம் என்றும், 165–ஆவது நாள் அபர (பின்) வாக்கியம் என்றும் சொல்லப்படும். இவ்விரண்டிற்கும் உள்ள வித்தியாசமாகிய 15 நாள் என்பது இலக்காந்தம் என்று சொல்லப்படும். மேலே வந்த வருஷசேஷம் என்று முன்னமே நெ.(2) ஆவது அயிட்டத்தில் சொல்லப்பட்டுள்ள) 157 நாள்–17 நாழிகை–34 விநாடி என்ற தொகைக்கும் பூர்வ வாக்கியமாகிய 150 நாளுக்கும் உள்ள வித்தியாசமாகிய 7–நாள்–17 நாழிகை –34 விநாடி என்பது தினசேஷம் என்று சொல்லப்படும்.

தொடர்ச்சி 8–வது பக்கம்

ஆகையால் அபர வாக்கியமான 165–ஆவது நாள் விகாரி வருஷம் சித்திரை மாதம் 8–ந் தேதி 29 நாழிகைக்கு உரியதாகும். அபரவாக்கியமாகிய 165 நாளுக்கும் பூர்வ வாக்கியமான 150 நாளுக்கும் வித்தியாசம் 15–நாள் இந்த 15யை சித்திரை மாதம் 8–ந் தேதி 29 நாழிகையிலிருந்து கழிக்க விளம்பி வருஷம் பங்குனி மாதம் 24–ந் தேதி 29 நாழிகை வரும். ஆகையால் அபர வாக்கியம் இந்த 24–ந்தேதி 29 நாழிகைக்கு உரியதாகும். இவ்விதமாகவே இந்த 2–ஆவது பரிவிருத்தியில் கண்டுள்ள வாக்கிய நாட்களின் எண்ணிற்குரிய தேதிகளைக் கணிக்கவேணும்.

## அயிட்டம் நெ.(6):- குருவின் சுத்தஸ்புடம்

குருவின் 2–ஆவது பரிவிருத்தி டேபில் நெ.(3)2–வது மலர் பிரகாரம்

| வாக்கியத்தின் நெம்பர் (1) | 150 | 165 | 175 | 185 | 195 | 204 |
|---|---|---|---|---|---|---|
| வருஷம் மாதம் தேதி 29 நாழிகைக்கு... (2) | விளம்பி பங்குனி 24 | விகாரி சித்திரை8 | சித்தி18 | சித்தி28 | வைகாசி7 | வைகாசி 16 |
| மத்திமஸ்புடம் டேபில் நெ(3) படி (3) | பா–க–விக 229–47–00 | பா–க–விக 228–48–00 | பா–க–விக 227–48–00 | பா–க–விக 226–53–00 | பா–க–விக 225–12–00 | பா–க–விக 224–03–00 |
| வர்ணாக்ஷரஎண் டேபில்நெ(3) 2–வது மலர்படி (4) | –4 | –4 | –5 | –5 | –5 | –5 |
| வர்ணாக்ஷரஸ்புடம் டேபில்நெ(4) Aபடி (5) | +0–41–36 | +0–41–36 | +0–52–00 | +0–52–00 | +0–52–00 | –0–52–00 |
| (3)ம் (5)ம் சேர்க்க (6) | 230–28–36 | 229–29–36 | 228–40–00 | 227–45–00 | 226–04–00 | 224–55–00 |
| துருவஸ்புடம் அயிட்டம்நெ(3)படி (7) | –10–24–00 | –10–24–00 | –10–24–00 | –10–24–00 | –10–24–00 | –10–24–00 |
| (6)ம் (7)ம் சேர்க்க வருவது குருவின் சுத்த ஸ்புடம் (8) | 220–04–36 | 219–0 5–36 | 218–16–00 | 217–21–00 | 215–40–00 | 214–31–00 |
| (8)யை எடுத்து எழுத (9) | | 220–04–36 | 219–05–36 | 218–16–00 | 217–21–00 | 215–40–00 |
| (8)ல் இருந்து (9)யைக் கழிக்க வருவது கதி அல்லது வீதம்(10) | | –0–59 –00 | –0–49–36 | –0–55–00 | –1–41–00 | –1–09–00 |

மேலும் 1–ஆவது பாகம் அயிட்டம் நெ.(12) உதாரணம் நெ.(1: பிரகாரம் விகாரி வருஷத்திய சித்திரை மாதப் பிறப்பு விளம்பி வருஷம் பங்குனி மாதம் கடைசி தேதி திங்கட்கிழமை 46 நாழிகை 33 விநாடி–45 தற்பரை ஆகும். மேலே வந்த வருஷ சேஷமாகிய 157 நாள்–17 நாழிகை–34 விநாடியை குருவின் 2–ஆவது பரிவிருத்தியின் அபரவாக்கியமாகிய 165 நாளாக்க இந்த வருஷ சேஷத்துடன் 7நாள்–42 நாழிகை–26 விநாடி கூட்ட வேண்டும். இந்த 7 நாள்–42 நாழிகை–26 விநாடி என்ற தொகையை விகாரி வருஷம் சித்திரை மாதப் பிறப்பாகிய பங்குனி கடைசி தேதி 46 நாழிகை 33 விநாடி–45 தற்பரையுடன் கூட்ட விகாரி வருஷம் சித்திரை மாதம் 8–ந் தேதி–29 நாழிகை (நாழிகை வரையிலும்) வரும் ஆகையால் குருவின் 2-ஆவது பரிவிருத்தியில் அபரவாக்கியம் என்ற 165–வது வாக்கியம் விகாரி வருஷம் சித்திரை மாதம் 8–ந் தேதி (சூரிய உதயாதி நாழிகை) 29 நாழிகைக்கு உரியதாகும். இவ்விதமாக பரிவிருத்தி வாக்கிய நாளின் மாதம், தேதிகளை நிர்ணயிக்க வேணும்.

மேலே சொல்லியுள்ளவற்றைக் கீழே சுலபமாகக் காண்பிக்கப்பட்டிருக்கின்றது.

| | நாள்– | நாழிகை– | விநாடி– | விதற்பரை | |
|---|---|---|---|---|---|
| அபரவாக்கியம் | 165 – | 00 – | 00 – | 00 | (1) |
| வருஷ சேஷம் | 157 – | 17 – | 34 – | 00 | (2) |
| வித்தியாசம் | 7 – | 42 – | 26 – | 00 | (3) |
| விகாரி வருஷம் சித்திரை பிறப்பு கடைசி தேதி – | | 46 – | 33 – | 45 | (4) |
| 3-ம் 4–ம் கூட்ட சித்தி மீ | 8 – | 28 – | 59 – | 45 | (5) |

அல்லது விகாரி வருஷம் சித்திரை மீ 8–29 நாழிகை ஆகும்.

**அயிட்டம் நெ. (7):-** மேலே கொடுத்துள்ள அயிட்டம் நெ.(6) குருவின் சுத்தஸ்புடம் என்பதைக் கீழ் கண்டபடி விளக்கிச் சொல்லுவோம். நாம் விகாரி வருஷம் சித்திரை மாதம் பிறப்பிற்குக் கணிதம் செய்ததில் பூர்வ வாக்கியம் குருவின் 2–ஆவது பரிவிருத்தியில் 150நாள் என்று வந்தது. இந்த 150–ஆவது நாள் முதல் 2–ஆவது பரிவிருத்தியில் உள்ள (டேபில் நெ.(3)ல் உள்ள) வாக்கிய நாட்களை 150, 165, 175, 185, 195, 204... என்று வரிசையாக 399–ஆவது நாள் வரைக்கும் வரிசையாக விடாமல் அயிட்டம்

நெ.(6)ல் 1–ஆவது கலத்தில் கண்டபடி எழுதிக்கொண்டே போகவும். பிறகு இந்தப் பற்பல வாக்கிய நாட்களுக்கு உரிய மாதம் தேதியை 2–ஆவது கலத்தில் கண்டபடி கணக்கிட்டு எழுதவும். இதை எழுதும் விதம் எப்படி என்றால் நாம் முன்னமே 165–ஆவது வாக்கியம் நாள் சித்திரை மீ 8–ந்தேதிக்கு உரியது என்று சொல்லியிருக்கின்றோம். 175–ஆவது வாக்கியத்திற்கும் 165–ஆவது வாக்கியத்திற்கும் வித்தியாசம் 10 நாள் ஆகும். இந்தப் பத்து நாளை 165–க்குரிய சித்திரை மீ 8–ந் தேதி 29 நாழிகையுடன் கூட்ட சித்திரை மீ 18–ந் தேதி–29 நாழிகை வரும். இவ்விதமாகக் கணக்கிட்டுக் கொண்டே போக மேற்கொண்டு வருகின்ற ஒவ்வொரு வாக்கிய நாட்க்குரிய மாதம் தேதி நாழிகை கிடைத்து விடும். பிறகு 2–ஆவது பரிவிருத்தியில் 150, 165, 175, 185, 195, 204–ஆவது வாக்கியங்களுக்கு எதிரில் கொடுத்த மத்திம ஸ்புடத்தை 3–ஆவது கலத்தில் கண்டபடி எழுதவும். பிறகு இதே வாக்கியங்களுக்கு எதிரில் கொடுக்கப்பட்டுள்ள வர்ணாக்ஷர எண்களைத் தனருணக்குறிகளுடன் (4)–ஆவ்து கலத்தில் கண்டபடி வரிசையாக எழுதவும். பிறகு இந்த வர்ணாக்ஷர எண்களுக்குரிய வர்ணாக்ஷர ஸ்புடத்தை டேபில் நெ.(4)A-ல் இருந்து எடுத்து (5)–ஆவது கலத்தில் கண்டபடி எழுதவும். பிறகு (3) ஆவது (5) ஆவது கலங்களில் உள்ள தொகைகளை ஒன்றாகச் சேர்க்கவும். பிறகு துருவஸ்புடத்தை (7)–ஆவது கலத்தில் கண்டபடி எழுதவும், பிறகு (6) ஆவது, (7) ஆவது கலங்களில் உள்ள தொகைகளை (8)–ஆவது கலத்தில் கண்டபடிச் சேர்க்கவும். இப்படிச் சேர்க்க வருகின்ற தொகைதான் அந்தந்த வாக்கியத்திற்குரிய குருவினுடைய சுத்தஸ்புடமாகும். பிறகு (8)–வது கலத்திலுள்ள தொகையை (9)–ஆவது கலத்தில் கண்டபடி ஒரு கலம் தள்ளி எழுதவும். பிறகு (8)–ஆவது கலத்திலுள்ள தொகையிலிருந்து (9)–ஆவது கலத்திலுள்ளத் தொகை–யைக் கழிக்கவும். இவ்விதமாகக் கழிக்க (10–ஆவது) கலத்தில் வருகின்ற தொகை கிரகத்தின் கதி அல்லது வீதம் ஆகும். கதி அல்லது வீதம் என்பது ஒரு கிரகம் செல்லுகின்ற ஓட்டத்தின் அளவு அல்லது பிரமாணம் ஆகும். இவ்விதமாகக் குருவினுடைய சுத்த ஸ்புடத்தைக் கணித்துக் கொண்டே போக வேணும். 2–ஆவது பரிவிருத்தியிலுள்ள எல்லா வாக்கியங்களும் முடிந்து விட்ட பிறகு (அஃதாவது 399–ஆவது நாள் வாக்கியத்தை உபயோகப்படுத்தி விட்ட பிறகு) 3–ஆவது பரிவிருத்தியை முதலிலிருந்து தேவையான வரையிலும் உபயோகப்படுத்த வேணும்.

## அயிட்டம் நெ.(8) குருவின் சார கணிதம்

(1) குருவினுடைய சுத்த ஸ்புடங்களைக் கணித்துக் கொண்ட பிறகு இதனுடைய சாரத்தைக் கணிக்க வேணும். திருக்கணித கணிதத்தில் சூரியனுடைய சாரத்தைக் கணித்தது போலவே கணிக்கவும். இதற்காக ஓராவது பாகத்திலுள்ள டேபில் நெ.(27)–யையும் டேபில் நெ.(24)–யையும் உபயோகப்படுத்தவேணும்.

(2) விளம்பி வருஷம் பங்குனி மீ 24–ந் தேதி 29 நாழிகைக்கு (அதாவது 150-ஆவது வாக்கிய தினத்தில் குருவினுடைய சுத்த ஸ்புடம் 220 பாகை–04 கலை–36 விகலை ஆகும். ஆகையால் டேபில் நெ.(27)யைப் பார்க்கக் குரு அனுஷ நட்சத்திரத்தின் மூன்றாவது பாதத்தில் இருப்பதாக ஏற்படுகிறது. மேலும் விகாரி வருஷம் சித்திரை மாதம் 8–ந் தேதி 29 நாழிகைக்கு குருவின் சுத்த ஸ்புடம் 219 பாகை–05 கலை–36 விகலை ஆகிறது. இந்தச் சுத்த ஸ்புடம் குறைந்திருப்பதால் குருவக்கிர கதியில் இருக்கின்றது என்று ஏற்படுகிறது. ஆகையால் வக்கிர கதியில் குரு அனுஷம் 2–ல் எப்போது வரும் என்பதைக் கணிக்கவேணும், டேபில் நெ.(27ல்) 8,9,4,5 கலங்களைப் பார்க்க. வக்கிரகதியில் அனுஷம் 2–ன் ஸ்புடம் 220 பாகை–00 கலை என்று ஏற்படுகின்றது. ஆகையால் குருவின் சுத்தஸ்புடம் எப்போது 220 பாகை–00 கலை ஆகும் என்பதைக் கணிக்கவேண்டும். அதாவது பங்குனி மாதம் 24–ம் தேதி 29 நாழிகைக்கு குருவின் சுத்த ஸ்புடம் 220 பாகை–04 க்லை–36 விகலையும், சித்திரை மாதம் 8–ந்தேதி–29 நாழிகைக்குக் குருவின் ஸ்புடம் 219 பாகை–05 கலை–36 விகலையுமானால் குருவின் ஸ்புடம் எப்போது 220 பாகை–00 கலை–00 விகலை ஆகும் என்பதைக் கணிக்கவேணும்.

### இந்தக் கணிதத்தைக் கீழ்கண்டபடி செய்யவும்.

உதாரணம். நெ.(1):-

| | பா | கலை | விக | |
|---|---|---|---|---|
| அனுஷம் 2–ன் வக்ரஸ்புடம் | 220 | 00 | 00 | (1) |
| விளம்பி வருடம் பங்குனி மாதம் 24ந் தேதி 29 நாழிகைக்கு குருவின் ஸ்புடம் | 220 | 04 | 36 | (2) |
| (1)-க்கும் (2)–க்கும் வித்தியாசம் | 0 | 04 | 36 | (3) |

| | | | | |
|---|---|---|---|---|
| 15நாள் கதி வீதம் | 0 | 59 | 00 | (4) |
| 5 நாள் கதி வீதம் | 0 | 19 | 40 | (5) |
| 1 நாள் கதி வீதம் | 0 | 03 | 56 | (6) |
| 1 நாள் தினகதி | 0 | 04 | கலைவரையில் | (7) |
| 1 நாளுக்குஸ்புடம் (6) பிரகாரம் | 0 | 03 | 56 | (8) |
| (3)ல் இருந்து (8)யைக் கழிக்க | 0 | 00 | 40 | (9) |
| அல்லது | 0 | 01 | | (10) |
| டேபில் நெ(24) படி (10)க்கு | 31584 | | | (11) |
| டேபில் நெ 24 படி (7)க்கு | 25563 | | | (12) |
| (11)ல் இருந்து (12)யைக் கழிக்க | 6021 | | | (13) |

(13)க்கு டேபில் நெ(24) படி (14) 6 மணி – 00 நிமிஷம் அல்லது 15 நாழிகை–00 விநாடியாகும். ஆகையால் குரு பதினைந்து தினத்திற்கு 0 பாகை–59 கலை–00 விகலை (அல்லது) 1 நாளைக்கு 0 பாகை–03 கலை–56 விகலை வீதம் செல்லுமானால் 0 பாகை–04 கலை–36 விகலை செல்ல குரு 1நாள்–15 நாழிகை–00 விநாடி எடுத்துக் கொள்ளுகின்றது. இந்தக்காலம் விளம்பி வருஷம் பங்குனி மீ 24–ந்தேதி 29 நாழிகையில் இருந்து கணக்கிட வேண்டும்.

விளம்பி வருஷம் பங்குனிமீ–24–ந் தேதி–29 நாழிகை–00 விநாடி(15)
பாகை 0–04 கலை–36 விகலை செல்லுவதற்குக் காலம் (14) படி
1 நாள்–15 நாழிகை–00 விநாடி (16)

மொத்தம் (15)ம்(16) கூட்ட பங்குனி 25–44 நாழிகை–00 விநாடி ஆகும். ஆகையால் குரு விளம்பி வருடம் பங்குனி மாதம் 25–ந்தேதி–44 நாழிகை–00 விநாடிக்கு அனுஷம் 2–ல் செல்லுகின்றது என்று ஏற்படுகிறது.

உதாரணம் நெ.(2):- குரு வக்கிரகதியில் எப்போது அனுஷம் 1–க்கு வரும் என்பதைக் கணிப்போம்:-

அனுஷம் 1–ன் வக்கிரகதி ஸ்புடம் டேபில் நெ(27) பிரகாரம் 216 பாகை–40 கலை–00 விகலையாகும். இப்போது குருவின் ஸ்புடங்களைப் பார்க்க இந்தத்தொகை சித்திரை மாதம் 28–ந்தேதிக்கும் வைகாசி மாதம் 7–ந்தேதிக்கும் உரிய ஸ்புடத் தொகைகளுக்கு இடையில் இருப்பதாகத் தெரியவருகிறது. ஆகையால் இவ்விரண்டு ஸ்புடங்களையும் இவற்றின் வித்தியாசத்தையும் (வீதத்தையும்) உபயோகப்படுத்தவேணும்.

| | பாகை | கலை | விகலை | |
|---|---|---|---|---|
| அனுஷம் 1–ன் வக்ர ஸ்புடம் (1) | 216 | 40 | 00 | |
| விகாரி சித்திரை 28ந் தேதி 29 நாழிகைக்கு குருவின் ஸ்புடம் (2) | 217 | 21 | 00 | |
| (1)க்கும் (2)க்கும் வித்தியாசம் (3) | 0 | 41 | 00 | |
| கதி=வீதம் | | | | |
| 10 நாள் | 1 | 41 | 00 | (4) |
| 5 நாள் | 0 | 50 | 30 | (5) |
| 1 நாள் | 0 | 10 | 06 | (6) |
| தினகதி | 0 | 10 கலைவரையில் | | (7) |
| 4 நாளுக்கு ஸ்புடம் (6) பிரகாரம் | 0 | 40 | 24 | (8) |
| (3)ல் இருந்து (8)யைக் கழிக்க | 0 | 00 | 36 | (9) |
| அல்லது | 0 | 01 | | (10) |
| டேபில் நெ 24 படி 10க்கு | 31584 | | | (11) |
| டேபில் நெ 24 படி 7க்கு | 21534 | | | (12) |
| (11) ல் இருந்து (12)யைக் கழிக்க | 10000 | | | (13) |

(13)க்கு டேபில் நெ24 படி(14) 2மணி–24 நிமிஷம் அல்லது.

6 நாழிகை–00 விநாடிவரும். ஆகையால் குரு 10 நாளுக்கு 1 பாகை–41 கலை வீதம் 0 பாகை–41 கலை செல்ல 4 நாள்–6நாழிகை எடுத்துக் கொள்ளுகின்றது. இது சித்திரை மாதம் 28–ந் தேதி 29நாழிகை முதல் ஆகும்.

| | | |
|---|---|---|
| சித்திரை மாதம் | 28–29 நாழிகை 00 விநாடி | (15) |
| நாள் | 4–6 நாழிகை 00 விநாடி | (16) |

மொத்தம் (15),(16)ம் கூட்ட சித்திரை 32–35 நாழிகை–00 விநாடியாகும்.

சித்திரைமாதம் மொத்த தேதி 31 ஆனபடியால் சித்திரை 32–35 நாழிகை–00 விநாடி என்பது வைகாசி மாதம் 1–ந் தேதி–35 நாழிகை 00 விநாடியாகும். ஆகையால் குரு வக்கிரகதியில் அனுஷம் 1–க்கு விகாரி வருடம் வைகாசி மாதம் 1–ந் தேதி 35 நாழிகை–00 விநாடிக்குச் செல்லுகின்றது என்று ஏற்படுகிறது.இவ்விதமாகவே குருவினுடைய சாரத்தை வருஷம் முழுவதும் கணித்துக் கொண்டே போகவும்.

## அயிட்டம் நெ.(9):- ஒரு குறித்த காலத்திற்குக் குருவின் ஸ்புடத்தைக் கணிக்கும் வழி:-

உதாரணம் நெ.(3):- உதாரணமாக விகாரி வருட சித்திரை மாதம் 9-ந்தேதி இரவு சூரிய உதயாதி நாழிகை 35–விநாடி 37½-க்குக் குருவினுடைய ஸ்புடத்தைக் கணிப்போம். அயிட்டம் நெ(6)ல் ஏற்கனவே முன்னமே கணித்து வைத்திருக்கின்ற ஸ்புடங்களைப் பார்க்க சித்திரைமாதம் 9–ந்தேதி–35 நாழிகை –37½ விநாடி என்பது 165–ஆவது வாக்கியம் சித்திரை மாதம் 8–ந் தேதிக்கும் 175–ஆவது வாக்கியம் சித்திரைமீ 18–ந் தேதிக்கும் இடையில் இருக்கின்றது. இவ்விரண்டு தேதிகளின் 29நாழிகைக்குக் குருவின் ஸ்புடம் 219 பா–05 கலை–36 விகலையும், 218 ப்ாகை–16 கலை –00 விகலையும் ஆனால் குறித்த காலமாகிய சித்திரைமீ 9–ந் தேதி–35 நாழிகை–37½ விநாடிக்குத் திரை ராசிக்கணிதம் பிரகாரம் கீழ்கண்டபடி கணிதம் செய்யவேணும். குறித்தகாலமாகிய சித்திரைமீ 9-ந்தேதி 35–நாழிகை–37½ விநாடி என்பது சித்திரை மாதம் 8–ஆம் தேதி 29 நாழிகையிலிருந்து 1 நாள் 6 நாழிகை –37½ விநாடி வித்தியாசமாக இருக்கின்றது. ஆகையால் இந்தத் தொகை காலத்தில் குரு செல்லுகின்ற தூரத்தை டேபில் நெ(24)ன் உதவியால் கணிக்கவேணும். இதற்கு

| | பாகை | கலை | விகலை | |
|---|---|---|---|---|
| சித்திரை மாதம் 8–ந்தேதி ஸ்புடம். | 219 | 05 | 36 | (1) |
| சிதத்திரை மாதம் 18–ந்தேதி ஸ்புடம். | 218 | 16 | 00 | (2) |
| (1)ல் இருந்து (2)யைக் கழிக்க வருவது கதி அல்லது வீதம் | 0 | 49 | 36 | (3) |
| 10நாள் | 0 | 49 | 36 | (4) |
| 5நாள்– | 0 | 24 | 48 | (5) |
| 1 நாள் – | 0–04 | 57 | 36 | (6) |
| தினகதி அல்லது=0–05கலைவரையில் | | | | ( 7) |
| 1 நாளுக்கு ஸ்புடம் (6) பிரகாரம் (8) | 0 | 04 | 57 | (8) |
| 6 நாழிகை–37½ விநாடிக்கு டேபில் நெ. (24) பிரகாரம் அல்லது–6நா–38–விநாடிக்கு | 9570 | | | (9) |
| தினகதி 0 பா–05 கலைக்கு டேபில் நெ(24)பிரகாரம் | 24594 | | | (10) |
| (9)ம் (10)ம் கூட்ட | 34164 | | | (11) |

(11)க்கு டேபில் நெ(24) பிரகாரம் (12) 0 பாகை–1 கலை வருகிறது. (12)

ஆகையால் 1 நாள்–6 நாழிகை–37½ விநாடிக்குக் குரு செல்லுகின்ற தூரம் (8)ம், (12)ம் கூட்ட வருகின்ற 0பாகை–05 கலை–57 விகலை ஆகும். குரு வக்கிரகதியில் இருப்பதால் (அஃதாவது காலம் அதிகப்பட) ஸ்புடம் குறைகின்றது. ஆகையால் 8ந்தேதி–29 நாழிகைக்கு உரிய 219 பாகை–05 கலை–36 விகலையிலிருந்து 1 நாள்–6 நாழிகை–37½ விநாடிக்கு உரிய ஸ்புடமாகிய 0 பாகை–05 கலை–57 விகலையைக் கழிக்க வேணும். இவ்விதம் கழிக்க வருகின்ற 218 பாகை–59 கலை–39 விகலையே குறித்த காலமாகிய சித்திரைமீ –9ந் தேதி–35 நாழிகை–37½ விநாடிக்குக் குருவினுடைய ஸ்புடம் ஆகும்.

அயிட்டம் நெ.(10) உதாரணம் நெ.(4)– ஒரு குறித்த காலத்திற்கு குருவினுடைய ஸ்புடத்தைக் கணிக்கத் தேவையானபோது இந்தக்குறித்த காலத்திற்கு முந்தி பிந்தி வாக்கிய ஸ்புடங்கள் (அஃதாவது) பூர்வவாக்கிய அபரவாக்கிய ஸ்புடங்கள் தெரியாத போது குருவினுடைய ஸ்புடத்தைக் கணிக்கும் வழி:- உதாரணமாக விகாரிவருஷம்–ஆனி மீ–23ந்தேதி–35 நாழிகை–37½ விநாடிக்கு குருவினுடைய ஸ்புடத்தைக் கணிப்போம்:- இந்தக் குறித்த வேளைக்கு (அயிட்டம் நெ.(2) உதாரணம் நெ.(1) முதல் அயிட்டம் நெ.(5) வரையிலும் முன்னமே சொல்லியுள்ளவழிப் பிரகாரமே கலிசுத்ததினம், குருவின் கதபரி விருத்தி, நடப்புப் பரிவிருத்தி, துருவஸ்புடம், வர்ணாக்ஷர எண், வர்ணாக்ஷர ஸ்புடம், பூர்வவாக்கியம், அபரவாக்கியம், பூர்வவாக்கிய சுத்தஸ்புடம், அபரவாக்கிய சுத்த ஸ்புடம் ஆகிய இவற்றை எல்லாம் முன்னே சொல்லியுள்ள வழிப்பிரகாரமே கணிக்கவேணும். கணிக்கும் வழி கீழ்கண்ட பிரகாரம் ஆகும்:-

(a) விகாரி வருஷம் ஆனி மாதம்–23–ந்தேதி–35 நாழிகை–371½ விநாடிக்குக் கலிசுத்த தினத்தைக் கணித்தல்:-

விகாரி வருஷ சித்திரைமாதப் பிறப்பிற்குக்கலி சுத்ததினம்

| | நாள் | நாழி | விநாடி | தற்பரை | |
|---|---|---|---|---|---|
| டேபில் நெ(10) (b) படி அல்லது அயிட்டம் நெ(12) உதாரணம் நெ(1) பிரகாரம்= | 1848206 | 46 | 33 | 45 | (1) |
| ஆனிமீ த்திற்குக் கூட்ட வேண்டிய தொகை–அயிட்டம் நெ(6) (a) படி= | 62 | 19 | 44 | 00 | (2) |
| (1)ம், (2)ம் கூட்ட வருவது கலிசுத்ததினமாகும்= | 1848269 | 06 | 21 | 45 | (3) |

ஆகையால் ஆனிமாதப் பிறப்பு 6 நாழிகை–21 விநாடி–45 தற்பரை ஆகிறது. ஆகையால் (1–வது பாகம் அயிட்டம் நெ(9) டேபில் நெ(9) பிரகாரம்) 6 நாழிகையுள்ள தினமே ஆனிமாதம் 1–ந்தேதி ஆகும். ஆகையால் இந்த 1–ந் தேதி–6நாழிகை–21 விநாடி 45 தற்பரை முதல் குறித்த காலமாகிய ஆனிமீ 23–ந் தேதி–35 நாழிகை–(37½ விநாடி அல்லது) 37 விநாடி–30 தற்பரை வரையிலும் செல்லான காலம் 22 நாள்–29 நாழிகை–15 விநாடி–45 தற்பரை ஆகும். இந்தத்தொகையை மேலே (3)ல் கணித்து வைத்துள்ள கலி சுத்ததினமாகியநாள் 1848269–06 நாழிகை–21 விநாடி–45 தற்பரையுடன் கூட்ட வருகின்ற 1848291நாள்–35 நாழிகை–37 விநாடி 30 தற்பரையே குறித்தகாலம் வரையிலும் செல்லான மொத்தக் கலிசுத்த தினமாகும்.

| | நாள் | நாழி | விநா | தற் | | |
|---|---|---|---|---|---|---|
| கலிசுத்ததினம் | 1848291 | 35 | 37 | 30 | ஆகும் | (1) |
| கழிக்கப்படுகின்ற | | | | | துருவம்–கலை | |
| மண்டலம் | 1570425 | 17 | 00 | 00 | (–)261 கலை | (2) |
| மிச்சம் | 277866 | 18 | 37 | 30 | ... ... | (3) |
| மண்டலம் | 125648 | 50 | 00 | 00 | (–) 009 கலை | (4) |
| மிச்சம் | 152217 | 28 | 37 | 30 | ... ... | (5) |
| மண்டலம் | 125648 | 50 | 00 | 00 | (–)009 கலை | (6) |
| மிச்சம் | 26568 | 38 | 37 | 30 | ... ... | (7) |
| மண்டலம் | 21539 | 48 | 00 | 00 | (–)619 கலை | (8) |
| மிச்சம் | 5028 | 50 | 37 | 30 | ... ... | (9) |
| மண்டலம் | 4387 | 44 | 00 | 00 | (–) 274 கலை | (10) |
| மிச்சம் (து–பெ–சேஷம்) | 641 | 06 | 37 | 30 | ... ... | (11) |

பிறகு 641 நாளை 1 பரிவிருத்தியின் நாளாகிய 399 நாளால் வகுக்க மிச்சம் 242 நாள் வரும், பலம் 1–வரும். ஆகையால் கதபரிவிருத்தி ஒன்றாகும். நடப்புப் பரிவிருத்தி 2 ஆகும். வருஷ சேஷம் 242 நாள்–06 நாழிகை–37 விநாடி–30 தற்பரையாகும். குருவின் 2–ஆவது பரிவிருத்தியைப் பார்க்க இந்த வருஷ சேஷமாகிய 242 நாளுக்கு அடுத்த பெரிய வாக்கியம் 249 நாள் ஆகும். இந்த 249 நாளே அபர வாக்கிய நாள் ஆகும். 242–நாளுக்கு அடுத்த சிறிய வாக்கியமாகிய 234 நாளே பூர்வ வாக்கிய நாள் ஆகும். துருவஸ்புடம் முன் சொல்லிய பிரகாரம் (–) 10 பாகை–24 கலையாகும். வர்ணாக்ஷர எண் +1 க்கு முன் சொல்லிய பிரகாரமே வர்ணாக்ஷர ஸ்புடம் (–) 0 பாகை–10கலை–24 விகலையாகும்.

| | நாள் | நாழி | விநா | தற் | |
|---|---|---|---|---|---|
| பூர்வ வாக்கியம். | 234 | 00 | 00 | 00 | (1) |
| வருஷ சேஷம் | 242 | 06 | 37 | 30 | (2) |
| தினசேஷம் (2)லிருந்து (1)யைக் கழிக்க | 8 | 06 | 37 | 30 | (3) |
| அல்லது | 8 | 06 | 38 | | |

விநாடிவரையில் ஆகும்.

பிறகு பூர்வவாக்கியம், அபரவாக்கியங்களின் சுத்த ஸ்புடத்தை அயிட்டம் நெ(6)ல் சொல்லியபடி கீழ்கண்ட பிரகாரம் கணிக்க வேண்டும்.

குருவின் 2–ஆவது பரிவிருத்தி டேபில் நெ.(3) பிரகாரம்:-

| வாக்கியத்தின் நெம்பர்(1) | 234 நாள் | | | 249 நாள் | | |
|---|---|---|---|---|---|---|
| | பா–க–வி | | | பா–க–வி | | |
| மத்திமஸ்புடம் டேபில் நெ.(3) படி (2) | 221 | 08 | 00 | 220 | 28 | 00 |
| வர்ணாக்ஷர எண் டேபில் நெ.(3) படி (3) | | –5 | | | –5 | |
| வர்ணாக்ஷரஸ்புடம் டேபில் நெ.(4) Aபடி (4) | +0 | 52 | 00 | +0 | 52 | 00 |
| (2)ம் (4)ம் சேர்க்க (5) | 222 | 00 | 00 | 221 | 20 | 00 |
| துருவஸ்புடம் (6) | (–)10 | 24 | 00 | (–)10 | 24 | 00 |
| (5)ம், (6)ம் சேர்க்க வருவது குருவின் சுத்தஸ்புடம் (7) | 211 | 36 | 00 | 210 | 56 | 00 |
| (7) யை எடுத்து எழுத (8) | | | | 211 | 36 | 00 |
| (7)ல் இருந்து (8)யைக் கழிக்க வருவது கதி அல்லது வீதம்(9) | | | | (–)0 | 40 | 00 |

பிறகு பூர்வ வாக்கியஸ்புடம் 211 பாகை–36 விகலை–00 கலையும், அபர வாக்கியஸ்புடம் 210 பாகை–56 கலை–00 விகலையும் ஆனால் தினசேஷமாகிய 8 நாள் –06 நாழிகை–38 விநாடிக்குத் திரை ராசிகம் பிரகாரம் குரு செல்லும் தூரத்தைக் கணிக்கவேணும். இதை இந்தப் பாகம் அயிட்டம் நெ.(9)ல் கண்டுள்ள பிரகாரம் கணிக்கவும்.

| | பா | க | வி | |
|---|---|---|---|---|
| வாக்கியம் 234 ஆவது நாள் ஸ்புடம் | 211 | 36 | 00 | (1) |
| வாக்கியம் 249 ஆவது நாள் ஸ்புடம் | 210 | 56 | 00 | (2) |
| (1)ல் இருந்து (2)யைக் கழிக்க வருவது கதி அல்லது வீதம் | 0 | 40 | 00 | (3) |
| 15நாள் கதி வீதம் = | 0 | 40 | 00 | (4) |
| 5நாள் கதி வீதம் = | 0 | 13 | 20 | (5) |
| 1 நாள் அல்லது தினகதி | 0 | 02 | 40 | (6) |
| அல்லது= | 0 | 03கலைவரையில் | | (7) |
| 5 நாளுக்கு ஸ்புடம் (5) பிரகாரம் | 0 | 13 | 20 | (8) |
| 3 நாளுக்கு ஸ்புடம் (6) பிரகாரம் | 0 | 08 | 00 | (9) |
| 8 நாள் ஸ்புடம் (8)ம் (9)ம் கூட்ட | 0 | 21 | 20 | (10) |
| டேபில் நெ.(24) பிரகாரம் 6 நாழிகை–38 விநாடிக்கு | 9570 | | | (11) |
| டேபில் நெ.(24) படி தினகதி பாகை–03 கலைக்கு | 26812 | | | (12) |
| (11)ம், (12)ம் கூட்ட | 36382 | | | (13) |
| 13க்கு டேபில் நெ.(24) படி சுமார் ஒரு கலை வரும் | | | | (14) |

ஆகையால் (10)ம், (14)ம் கூட்ட வருகிற 0 பாகை–22 கலை–20 விகலைதான் 8நாள்–6 நாழிகை–38 விநாடிக்குக் குரு செல்லும் தூரம் ஆகும். குரு வக்கிரகதியில் இருப்பதால் 234 வது வாக்கிய நாளுக்குரிய ஸ்புடமாகிய 211 பாகை–36 கலையில் இருந்து இந்த பாகை–22 கலை–20 விகலையைக் கழிக்க வருகின்ற ஸ்புடமாகிய 211 பாகை–13 கலை–20 விகலையே விகாரி வருடம் ஆனி மாதம் 23–ந் தேதியில் 35–நாழிகை–37½ (38) விநாடிக்குரிய சுத்தஸ்புடமாகும்.

# அத்தியாயம் நெ(2)

## அயிட்டம் நெ.(11):- கிரகங்களின் வக்கிரமும் உதைய அஸ்தமனங்களும்,

(a) நவக்கிரகங்களில் இராகு கேது தவிர மற்ற சூரியாதி ஏழு கிரகங்களும் மேற்குத் திக்கிலிருந்து கிழக்குத்திக்கை நோக்கித் தங்களுடைய சுற்றோட்டபாட்டை வீதி என்ற ஆர்பிட்டில் (Orbit-ல்) எப்போதும் நகர்ந்து கொண்டே இருக்கின்றன. இவற்றில் சூரியனும், சந்திரனும் எப்போதும் தங்களுடைய வீதியில் மேற்குப்பக்கமாகவிருந்து கிழக்கை நோக்கிச் சென்று கொண்டே இருக்கின்றன. இவை எதிர்த் திக்காகிய கிழக்கு-மேற்குத் திக்கில் ஒருபோதும் செல்லுகிறதே கிடையாது. மேற்குத் திக்கில் இருந்து கிழக்குத் திக்கில் செல்லுவதற்கு நேர்கதி (Direct Motion) (அல்லது) ருச்சுவி கதி என்று சொல்லப்படும். கிழக்குத் திக்கில் இருந்து மேற்குத் திக்கிற்குச் செல்லுவதற்கு வக்கிரகதி (Retrograde Motion) என்று சொல்லப்படும். சூரியனுக்கும் சந்திரனுக்கும் (தற்கால அமைப்பில்) வக்கிரகதி என்பதே கிடையாது. மற்ற ஐந்து கிரகங்களாகிய அங்காரகன், புதன், குரு,சுக்கிரன், சனி இவற்றுக்குக் கொஞ்சகாலம் நேர்கதியும், கொஞ்ச காலம் வக்கிரகதியும் ஆக இவ்விரண்டு கதிகளும் உண்டு. இராகு கேதுக்களுக்கு எப்போதும் வக்கிரகதியே தவிர நேர்கதி ஒருபோதும் (தற்கால அமைப்பில்) கிடையாது. அங்காரகன், புதன், குரு,சுக்கிரன், சனி, இவற்றை நாம் பூமியிலிருந்து பார்க்கும்போது இவை சில சமயம் வக்கிரகதியில் செல்லுவதுபோலத் தோற்றுவதே தவிர ஆனால் இவை எப்போதும் தங்களுடைய வீதியில் அஃதாவது பாட்டை வழியில் நேர்கதியிலேயேதான் உண்மையில் நகர்ந்து கொண்டே இருக்கின்றன. ஆகையால் வக்கிரகதி என்பது ஒரு தோற்றமே, மாயையே (illusion) தவிர ஒரு நிஜமான சம்பவம் அல்ல.

### (b) கிரகங்களின் உதயம்-அஸ்தமனம்:-

சூரியன் தவிர மற்றக் கிரகங்களாகிய சந்திரன், அங்காரகன், புதன், குரு, சுக்கிரன், சனி ஆகிய இவை நமது (வெறுங்) கண்களுக்குத்

தெரியும்போது உதயமாகி இருக்கின்றனவென்று சொல்லப்படும். இவை சூரியனுக்கு அருகில் இருப்பதால் சூரியனுடைய வெளிச்சத்தினால் நமது (வெறுங்) கண்களுக்குத் தெரியாமல் இருக்கும்போது அஸ்தமனத்தில் (அல்லது அஸ்தங்கத்தில் அல்லது மௌட்டியத்தில் (Heliacal Setting-ல்) இருப்பதாகச் சொல்லுவதுண்டு. ஆகையால் வெறுங்கண்களுக்கு ஒரு கிரகம் தெரிந்து கொண்டிருந்து பிறகு மறைந்து போகும்போது இக்கிரகம் அஸ்தமனத்தை (Heliacal - Setting யை)அடைகின்றது என்றும், தெரியாமலிருந்து தெரிய ஆரம்பிக்கும் போது இக்கிரகம் உதயத்தை (Heliacal-Rising-யை) அடைகின்றது என்றும் சொல்லுவது வழக்கம். உதயம் அல்லது அஸ்தமனம் என்பது சாதாரண வெறுங்கண்களை அநுசரித்துச் சொல்லக் கூடிய சம்பவங்கள் ஆகும். சில கூர்மையான கண்களுக்குக் கிரகம் கொஞ்சகாலம் அதிகமாக (அஸ்தமனமாவதற்கு முந்தி) தெரியக்கூடும், உதயத்திற்கு முந்தி கொஞ்சகாலம் முன்னமே தெரியக்கூடும். மங்கலான கண்களுக்கு அஸ்தமனத்திற்கு– முந்தி கொஞ்சகாலம் முந்தியே அஸ்தமனமாகக் கூடும், உதயகாலத்திற்குக் கொஞ்சகாலம் பிந்தி உதயமாவதைப் போலத் தெரியக்கூடும். உதயமும் அஸ்தமனமும் கண்களின் பார்வையின் சக்தியை அனுசரித்து இருக்கின்றன. மேலும் இவை நேரிடும் காலத்தில் உள்ள சீதோஷ்ண நிலையை அனுசரித்து உள்ள வாயுவின் நிலைமையை அல்லது தன்மையையும் அனுசரித்து இருக்கின்றன. மேலும் இவை நேரிடுங்காலம் இடத்திற்குத் தக்கவாறு (அக்ஷாம்சத்தை அனுசரித்து) வித்தியாசப்படக்கூடும். ஆகையால் இவை சரியான அல்லது துல்லியமான சம்பவங்கள் அல்ல (These are not exact astronomical phenomena) இவை தோராயமான சம்பவங்களே ஆகும். சூரியனை விட்டுப் பிரிந்து பன்னிரண்டு (12) பாகைக்கு மேல் சந்திரனும், பதினேழு (17) பாகைக்கு மேல் அங்காரகனும், பதின்மூன்று (13) பாகைக்கு மேல் புதனும், பதினொன்று (11) பாகைக்கு மேல் குருவும், எட்டு (8) பாகைக்கு மேல் சுக்கிரனும். பதினைந்து (15) பாகைக்கு மேல் சனியும் இருக்கும்போது உதயத்தை அடைகின்றன. இங்கு ஒரு கிரகத்திற்குக் குறித்த அளவு பாகைக்குள் இக்கிரகம் இருக்கும்போது இக்கிரகம் அஸ்தமனத்தை அடைகிறது. இவ்விதமாகவிருந்து இக்கிரகத்தின் ஸ்புடம் சூரியனுடைய ஸ்புடத்தைவிட அதிகமாக இருந்தால் இக்கிரகம் மேற்கே அஸ்தமனத்தை அடையும், குறைவாக இருந்தால் கிழக்கே அஸ்தமனத்தை அடையும். அங்காரகன், குரு, சனி ஆகிய இவை எப்போதும் மேற்கே

அஸ்தமனத்தை அடையும், எப்போதும் கிழக்கே உதயத்தையும் அடையும், புதனும் சுக்கிரனும் மேற்கே உதயத்தை அடைந்தால் இதே திக்கில் (அஃதாவது மேற்குத் திக்கிலேயே) அஸ்தமனத்தை அடையும். மேற்கில் அஸ்தமனத்தை அடைந்த பிறகு, கிழக்குத்திக்கில் உதயத்தை அடையும். கிழக்குத் திக்கில் உதயத்தை அடைந்தால் மறுபடியும் இதே திக்கில் (அஃதாவது கிழக்குத் திக்கிலேயே) அஸ்தமனத்தை அடையும். இந்த அஸ்தமனத்தை அடைந்த பிறகு மேற்குத் திக்கில் உதயமாகும். இவ்விதமாக உதயமும் அஸ்தமனமும் மாறிமாறி வரிசையாக வந்து கொண்டேயிருக்கும். அஃதாவது உதயமான திக்கிலேயே அஸ்தமனமும், அஸ்தமனம் நேரிட்ட திக்கிற்கு எதிர்த்திக்கில் உதயமும்நேரிடும். சந்திரன் எப்போதும் கிழக்குத் திக்கில் அஸ்தமனத்தையும் மேற்குத் திக்கில் உதயத்தையும் அடையும்.

அயிட்டம் நெ.(12):- உதய அஸ்தமன விதிகள்

(1) ஒரு கிரகத்தின் ஸ்புடம் சூரியனுடைய ஸ்புடத்தைவிட அதிகமாகவிருந்து இக்கிரகம், சூரியனைவிட்டு விலகியிருக்கும் தூரம் இக்கிரகத்தின் அஸ்தமன அளவு பாகையைவிட அதிகப்படும்போது இக்கிரகம் மேற்கே உதயமாகும்.

(2) ஒரு கிரகத்தின் ஸ்புடம் சூரியனுடைய ஸ்புடத்தைவிட அதிகமாக இருந்து இக்கிரகம் சூரியனை விட்டு விலகியிருக்கும் தூரம் இக்கிரகத்தின் அஸ்தமன அளவு பாகையை விட குறைவுபடும்போது இக்கிரகம் மேற்கே அஸ்தமனமாகும்.

(3) ஒரு கிரகத்தின் ஸ்புடம் சூரியனுடைய ஸ்புடத்தைவிடக் குறைவாக இருந்து இக்கிரகம் சூரியனை விட்டு விலகியிருக்கும் தூரம் இக்கிரகத்தின் அஸ்தமன அளவு பாகைக்கு மேல் அதிகப்படும்போது இக்கிரகம் கிழக்கே உதயமாகும்.

(4) ஒரு கிரகத்தின் ஸ்புடம் சூரியனுடைய ஸ்புடத்தைவிடக் குறைவாக இருந்து இக்கிரகம் சூரியனை விட்டு விலகியிருக்கும் தூரம் இக்கிரகத்தின் அஸ்தமன அளவு பாகையை விடக் குறைவுபடும்போது இக்கிரகம் கிழக்கே அஸ்தமனத்தை அடையும்.

## அயிட்டம் நெ.(13):- கிரகங்களின் வக்கிர ஆரம்பம் வக்கிர நிவர்த்தி, உதயம் அஸ்தமனம் ஆகிய இவற்றின் வாக்கியம் (டேபில் நெ.(3).

இங்கு கீழ்க்கண்ட கட்டத்தில் குறிக்கப்பட்டுள்ள நாட்கள் பரிவிருத்தி வாக்கியத்திலுள்ள வாக்கிய நாட்களைக் குறிக்கும்:-

| கிரகங்கள் | உதயமாகும் வாக்கியநாள் | வக்கிரம் ஆரம்பிக்கும் வாக்கிய நாள் | வக்ராஸ்தமனமாகும் வாக்கிய நாள் | வக்கிரோதயமாகும் வாக்கிய நாள் | வக்கிர நிவர்த்தி ஆகும் வாக்கிய நாள் | அஸ்தமனமாகும் வாக்கிய நாள் | மொத்த பரிவிருத்தி வாக்கிய நாள் |
|---|---|---|---|---|---|---|---|
| அங்காரகன் | 55கி | 321 | ... | ... | 429 | 725மே | 780 |
| புதன் | 17மே | 49 | 51மே | 65கி | 70 | 100கி | 116 |
| குரு | 14கி | 139 | ... | ... | 259 | 385மே | 399 |
| சுக்கிரன் | 35மே | 267 | 287மே | 297கி | 314 | 549கி | -584 |
| சனி | 17கி | 120 | ... | ... | 248 | 361மே | 378 |

இந்த வாக்கியத்தில் "மே" என்பது மேற்குத்திக்கையும் "கி" என்பது கிழக்குத்திக்கையும் குறிக்கும். உதாரணமாக புதன் ஒரு பரிவிருத்தியின் 116 நாட்களில் 17–ஆவது நாளில் மேற்கே உதயமாகும், 49–ஆவது நாளில் வக்கிரமாரம்பஞ்செய்யும், 51–ஆவது நாள் மேற்கே வக்கிராஸ்தமனத்தையடையும் 65–ஆவது நாள் கிழக்கே உதயத்தை அடையும், 70–ஆவது நாள் வக்கிரநிவர்த்தியை அடையும், 100–ஆவது நாள் கிழக்கே அஸ்தமனத்தை அடையும். இவ்விதமாக மற்றக் கிரகங்களுக்கு அறிந்துகொள்ளவும்.

## அயிட்டம் நெ.(14):– துருவப் பெயர்ச்சி:–

ஒவ்வொரு கிரகத்திற்கும் பல பரிவிருத்திகள் இருக்கின்றன. ஒரு கிரகத்தின் மொத்த பரிவிருத்திகளின் தொகை இக்கிரகத்தின் கடைசி சோத்திய மண்டல நாட்களின் தொகையை இக்கிரகத்தின் ஒரு பரிவிருத்தியின் மொத்த நாள் தொகையால் வகுக்க வருகின்ற (தோராயமான) முழு பலம் (Quotient in integer) எண்ணே ஆகும். ஒரு கிரகத்தின் ஆரம்ப பரிவி(ருத்தி அதாவத ஒராவது பரிவிருத்தி ஆரம்பம்

முதல் முடிவு பரிவிருத்தி அஃதாவது கடைசி பரிவிருத்தியின் முடிவுவரையில் இக்கிரகத்தின் துருவம் (அஃதாவது துருவஸ்புடத்தொகை) மாறாமல் ஒரே தொகையாக இருக்கும். இக்கிரகத்தின் கடைசி பரிவிருத்தியின் முடிவிலும் அடுத்துவருகின்ற ஓராவது பரிவிருத்தியின் ஆரம்பத்திலும் முந்திய நிலையான துருவஸ்புடத் தொகை மாறுதலை அடையும். ஆகையால் இந்தத் துருவமாறுதல் துருவப்பெயர்ச்சி என்று சொல்லப்படும்.

இந்தத் துருவப் பெயர்ச்சியின் தேதியைக் கணிக்கும் வழி:-

கடைசி பரிவிருத்தியின் கடைசி வாக்கியம் எந்தத் தேதியில் நேரிடுகின்றதோ அதே தேதியில் துருவப் பெயர்ச்சி நேரிடும். ஆகையால் கடைசி பரிவிருத்தியின் கடைசி வாக்கியத்தின் தேதி தெரிந்தால் துருவப் பெயர்ச்சியின் தேதி தெரிந்துவிடும். இது ஒரு வழியாகும். ஒரு வருஷ ஆரம்பத்திற்குக் கணிதஞ் செய்யும்போது இடையில் ஏதாவது ஒரு பரிவிருத்தி நடப்புப் பரிவிருத்தியாக வந்து இவ்வருஷம் முடிவதற்குள் கடைசி பரிவிருத்தி வராமல் இருந்துவிடக் கூடும். அப்போது இவ்வருஷத்தில் துருவப்பெயர்ச்சி இல்லை என்று ஏற்பட்டுவிடும். இவ்விதமாகச் சுலபமாக தெரிந்து கொள்ளலாம். மேலும் ஒரு வருஷத்தின் சித்திரைமாதப் பிறப்பு நாழிகை விநாடி காலத்திற்குக் கலிசுத்தத்தினத்தைக் கணித்துக் கழிக்கக்கூடிய சோத்திய மண்டல வாக்கியங்களைக் கழித்துக் கடைசியாக வருகின்ற மிச்சத்துடன் ஒரு வருஷத்திற்குரிய 365 நாள்–15 நாழிகை –31 விநாடியைக் கூட்டி வருகின்ற தொகை கடைசி சோத்திய மண்டல வாக்கியத்திற்கு அதிகப்படுமானால் இவ்வருஷத்திற்குள் துருவப் பெயர்ச்சி நேரிடுகிறதென்று ஏற்படும். அதிகப்படாமல் குறைந்தால் இவ்வருஷத்தில் துருவப் பெயர்ச்சி நேரிடவில்லை என்று ஏற்படும். கடைசி மண்டலத் தொகையிலிருந்து அவ்வருஷ ஆரம்ப காலத்திற்கு வருகின்ற கடைசி சோத்திய மண்டல மிச்சத்தை (அதாவது துருவப்பெயர்ச்சி மிச்சத்தைக்) கழிக்க வருகின்ற தொகை எவ்வளவோ அவ்வளவு தொகை வருஷ ஆரம்ப காலத்திலிருந்து செல்லும்போது துருவப்பெயர்ச்சி ஏற்படும். இந்தக் காலம் இதே வருஷத்திலேயே வரக்கூடும் அல்லது பல வருஷங்கள் சென்ற பிறகு வரக்கூடும்.

உதாரணம்:- நெ. (1) உதாரணமாகக் கலியுக 5059–ஆவது வருஷமாகிய விளம்பி வருஷத்தில் சனிக்குத் துருவப்பெயர்ச்சி உண்டா இல்லையா என்பதைக் கணிக்கலாம். 1–வது பாகம் டேபில் நெ.(10) (b) பிரகாரம் விளம்பி வருஷத்திற்குக் கலி சுத்ததினம் 1847841 நாள் – 31நாழிகை –02விநாடி –15தற்பரை ஆகும். அல்லது 1847841 நாள்–31 நாழிகை–02 விநாடி வரையிலும் ஆகும். இதற்கு அயிட்டம் நெ.(2) உதாரணம் நெ.(1) பிரகாரம் கீழ்க்கண்டபடி கணிதம் செய்யவும்.

| | கலிசுத்ததினம்–நாழி–விநாடி | | | சனி துருவம்–கலை | |
|---|---|---|---|---|---|
| டேபில் நெ.(1)–(5) பிரகாரம் சனியில் கழிக்கப்படுகின்ற | 1847841 | 31 | 02 | | (1) |
| மண்டலம் ... ... | 1589474 | 28 | 00 | (–) 326 ... | (2) |
| மிச்சம் ... ... | 258367 | 03 | 02 | ... ... | (3) |
| மண்டலம் ... ... | 182994 | 23 | 00 | (–) 013 ... | (4) |
| மிச்சம் ... ... | 75372 | 40 | 02 | ... ... | (5) |
| மண்டலம் ... ... | 21551 | 00 | 00 | (+) 043 ... | (6) |
| மிச்சம் ... ... | 53821 | 40 | 02 | ... ... | (7) |
| மண்டலம் ... ... | 21551 | 00 | 00 | (+) 043 ... | (8) |
| மிச்சம் ... ... | 32270 | 40 | 02 | ... ... | (9) |
| மண்டலம் ... ... | 21551 | 00 | 00 | (+) 043 ... | (10) |
| மிச்சம் (து.பெ.சே.) ... | 10719 | 40 | 02 | ... ... | (11) |

இங்கு கடைசி மிச்சமாகிய 10719 நாள் 40–நாழிகை–02விநாடி என்பது துருவப்பெயர்ச்சி மிச்சம் ஆகும். இத்துடன் வருஷமானம் என்ற வருஷ அளவாகிய 365 நாள்–15 நாழிகை–31 விநாடி 15–தற்பரையைக் கூட்ட 11084 நாள் 55 நாழிகை 33 விநாடி 15–தற்பரை வரும். இந்தத்தொகையின் சோத்திய கடைசி மண்டல வாக்கியமாகிய 10964 நாள்–32 நாழிகையைவிட அதிகமாகவிருப்பதால் இவ்வருஷத்தில் சனிக்குத் துருவப்பெயர்ச்சி ஏற்படுகிறது. கடைசி மண்டலத் தொகையாகிய 10964 நாள்–32 நாழிகை என்ற தொகையிலிருந்து துருவப் பெயர்ச்சி சேஷம் என்ற 10719 நாள்–40 நாழிகை–02 விநாடி என்ற தொகையை கழிக்கவருகின்ற 244நாள்–51 நாழிகை 58 விநாடியே வருஷப் பிறப்புக்காலத்திலிருந்து சென்றால் துருவப்பெயர்ச்சி ஏற்படும். இந்த தொகையை வருஷப்பிறப்புத் தொகையாகிய 1847841–31 நாழிகை–

02 விநாடியுடன் கூட்ட 1848086 நாள்–23 நாழிகை–00 விநாடி வரும். இந்தத் தொகைதான் துருவப்பெயர்ச்சி நேரிடும்போது சென்ற கலிசுத்ததினம் ஆகும். ஆகையால் மொத்த கலிசுத்ததினம் 1848086 நாள் 23 நாழிகை–00–விநாடி ஆகும். இதற்குத் தேதி கண்டு பிடிக்கும்வழி.

விளம்பி வருடப்பிறப்பு ஹேவிளம்பிவருடம் பங்குனி மாதம் கடைசி தேதி–31 நாழி–02 விநாடிக்கு ஆகும். துருவப்பெயர்ச்சி நேரிடுவதற்குச் செல்லான நாள் 244 நாள்–51 நாழிகை–58 விநாடி ஆகும். 1–ஆவது பாகம் அயிட்டம் நெ.(6) (a)யை பார்க்கக் கார்த்திகை மாதம் பிறக்கும் வரையிலும் செல்லான தொகை 216நாள்–48 நாழிகை– 13விநாடியை மேற்கண்ட 244 நாள்–51 நாழிகை–58விநாடியில் இருந்து கழிக்க வருகின்ற தொகையாகிய 28 நாள்–03நாழிகை–45 விநாடியே கார்த்திகை மாதம் பிறந்த பிறகு கார்த்திகை மாதத்தில் செல்லான தொகையாகும். விளம்பி வருஷம் கார்த்திகை மாதப் பிறப்பு கார்த்திகை மாதம் ஓராந்தேதி 19 நாழிகை–15 விநாடி ஆகும். (இதைப் பஞ்சாங்கத்தைப் பார்த்துத் தெரிந்து கொள்ளவேண்டும். அல்லது 1–ஆவது பாகம் டேபில் நெ.(11)ல் காட்டியபடி கணிக்கவேணும்.) இந்தத் தொகையுடன் 28நாள்–03நாழிகை–45விநாடியைக் கூட்ட வருகின்ற விளம்பி வருஷம் கார்த்திகை மாதம் 29ந் தேதி 23 நாழிகையே துருவப் பெயர்ச்சி நேரிடுகின்ற காலம் ஆகும்.

அயிட்டம் நெ.(15):- கணிதம் செய்யவேண்டிய ஒரு குறித்த காலம் (1–ஆவது பரிவிருத்தி தவிர) மற்ற இதர எந்தப்பரிவிருத்தியிலாகிலும் 1–ஆவது வாக்கிய நாளைவிடச் சிறியதாக இருக்கும்போது உடனே அடுத்த முன்பரிவிருத்தியின் (கத பரிவிருத்தியின்) கடைசி வாக்கியத்தைப் பூர்வ வாக்கியமாகவும் நடப்புப் பரிவிருத்தியின் 1–ஆவது வாக்கியத்தை அபர வாக்கியமாகவும் உபயோகப்படுத்தி குறித்த காலத்திற்குத் திரை ராசி கணிதம் பிரகாரம் முன்காட்டிய வழிப் பிரகாரம் கணிதம் செய்யவேண்டும்.

குறித்த காலம் 1–ஆவது நடப்புபரிவிருத்தியில் வந்து 1–ஆவது பரிவிருத்தி வாக்கிய நாளைவிடச் சிறியதாக அஃதாவது குறைந் திருக்கும்போது கணிதம் செய்ய வேண்டிய வழி:- இதற்கு துருவப் பெயர்ச்சி காலத்திற்கு கிருக சுத்த ஸ்புடத்தைக் கணிக்கவேணும்.

துருவப்பெயர்ச்சி காலமே 1–ஆவது பரிவிருத்தியின் 0 (பூஜ்ய) வாக்கிய நாள் ஆகும். குருவை உதாரணமாக எடுத்துக்கொண்டால் 2–ஆவது பாகம் டேபில் நெ.(2)ல் குருவிற்குக் கொடுத்துள்ள மந்தோச்சமாகிய 180 பாகை–00 கலையே குருவினுடைய 0 வாக்கிய தினத்தின் மத்தியமஸ்புடமாகும். (–) 4.3 என்ற எண் வர்ணாக்ஷர எண் ஆகும். இந்த (–)4.3 என்ற எண்ணிற்கு அயிட்டம் நெ.(4 A)ல் காட்டியுள்ள பிரகாரம் புதியதாக 1–ஆவது நடப்புப் பரிவிருத்திக்கு வர்ணாக்ஷரஸ்புடம் கணிக்கவேண்டும். பிறகு இந்த 1–ஆவது நடப்புப் பரிவிருத்திக்கு துருவஸ்புடம் கணிக்கவேண்டும். பிறகு முன் சொன்னபடி (தனம் ருணம் என்ற குறிப்பை கவனித்துக் கொண்டு) இந்த மத்திம ஸ்புடம், வர்ணாக்ஷர ஸ்புடம், துருவஸ்புடம் ஆகிய இம்மூன்று ஸ்புடங்களையும் தகுந்தபடி சேர்க்க சுத்தஸ்புடம் 0 வாக்கிய தினத்திற்கு வரும். இந்த பூஜ்ய வாக்கிய தினத்தின் பூர்வ வாக்கிய சுத்த ஸ்புடமே அபர வாக்ய சுத்த ஸ்புடமாகும். பிறகு இவ்விரண்டு ஸ்புடங்களை வைத்துக் கொண்டு குறித்த காலத்திற்கு திரை ராசி கணிதம் பிரகாரம் முன்னமே சொல்லியபடி ஸ்புடத்தைக் கணிக்க வேணும்.

குறிப்பு:- (1) ஒரு கிரகத்தின் வக்கிர ஆரம்பம், வக்கிர நிவர்த்தி, உதயம், அஸ்தமனம் ஆகிய இந்த சம்பவங்கள் நேரிடும் துல்லியமான நாழிகை–விநாடிகளைக் வாக்கிய கணிதத்தில் குறிப்பிடுவது மிகவும் கஷ்டமான காரியம். ஆகையால் 1–ஆவது பரிவிருத்தி முதல் கடைசி பரிவிருத்தி வரையிலும் பரிவிருத்தி வாக்கிய நாட்களின் சுத்த ஸ்புடத்திற்கு உபயோகப்படுத்துகின்ற நிலையான நாழிகையே மேற்சொல்லிய நான்கு சம்பவங்களுக்கும் உபயோகப்படுத்துவது வழக்கமாக இருந்து வருகின்றது.

ஜோதி பஞ்ச கிரகங்களின் ஸ்புட கணன மார்க்கத்தையும் சார கணன வழியையும் குருவை உதாரணமாக எடுத்துக் கொண்டு காட்டியிருக்கின்றேன். குருவிற்குச் சொல்லப்பட்ட வழிகளையே குஜன், புதன், சுக்கிரன், சனி ஆகிய இந்த நான்கு கிரகங்களுக்கும் அந்தக் கிரகத்தின் சோத்திய வாக்கியங்களையும் பரிவிருத்தி வாக்கியங்களையும் உப்யோகப்படுத்தி அனுஷ்டிக்கவேணும்.

